# 🌿 *Prelude to the Mountain Rain* 🌿

*— An Introductory Poem to "மலைப்பொழிவு"*

---

*On sacred heights where silence sings,*
*The Guru speaks as sunlight rings—*
*No thunder there, no wrathful storm,*
*But love distilled in perfect form.*

*From flesh to flame, from thought to soul,*
*He calls the broken back to whole;*
*Not creed, but clarity he gives,*
*A truth that breathes, a light that lives.*

*No sword, no throne, no temple gate—*
*But lotus-heart to meditate.*
*In every man the Christ concealed,*
*By selfless love and stillness revealed.*

*He is not law, but living word,*
*A whisper in the heart once heard.*
*He speaks not just to Jew or Greek,*
*But to the ones who inward seek.*

*In pranava's pulse, in OM's soft beat,*
*He walks with dust upon his feet—*
*Yet in his eye the stars arise,*
*And silence echoes paradise.*

*Beyond religion's iron thread,*
*He leads where living waters spread—*
*A yogi, Christed, stripped of pride,*
*With emptiness his only guide.*

*So come ye all, with ears to hear,*
*The blessed voice so calm and clear:*
*It rains from mountains not of stone—*
*But from the soul, to soul alone.*

---

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**

Pax Ravichandra-23-6-2025

# மலைப் பொழிவு

## மனிதம்

அறிவுக் கனியைத் தேர்ந்து ஆண்டவன்
கட்டளையை மீறிய ஆதிப் பெற்றோர்
தூய மனமான இன்பவனம் மறைந்து-
ஆணவ மனம் தோன்றிட நாணிய அகநிர்வணி



உடலைச் சேர்ந்ததோ மனம்
தன்னுணர்வைச் சேர்ந்ததோ ஆன்மா
இருமையின் சந்நிதியில், முக்குண இயல்பில்
மனித வாழ்வோ நாளும் போராட்டம்



ஆணவம், கன்மம், மாயை-மனதை
அலைக்கழிக்கும் ஆசையின் அலைகள்
அலைகடலாய் ஆணவ மனம் -ஆழத்திலே
அமைதியில் நிலைத்த தூய மனம்

## மனுவுருவான வார்த்தை

இருளும் ஒளியும் இரண்டறக் கலந்த உலகு,
நிர்க்குண, சகுண பிரம்மமாய் இறையழகு-
தன்னுணர்வும், சக்தியுமாய் எரிந்தும்
எரியாத முட்செடியில் இருப்பின் தரிசனம்
இருப்பவர் நாமே இறை நாமமோ-
ஓம் என்னும் பிரணவ மந்திரம்

இருள் சூழ்ந்த காலமில்லாக் காலத்தே
**ஒளி உண்டாகுக** ஓங்கார நாதமாய்
அதிர்ந்த இறைவாக்கு-ஒளியின் பிரசன்னத்தில்
மாட்சிமிக்க இறை தரிசனம்

பிரணவத்தின் அதிர்வில் சப்த பிரபஞ்சத்தின்
மலர்ச்சி, அன்பைப் பகிர்ந்து இன்புற
உலகை ஆண்டு நடத்திட மனிதர்களைப்
படைத்த இறையன்பின் மாட்சி

உயிர்கள் தோன்றி வாழ்வு மலர்ந்திட-
ஓசையற்ற நல்மணி நாதமாய்-
அனாஹததொனியாய் ஒலிக்கும்
ஓம் **என்ற அருள் வாக்கு**

தந்தை, தாய் உடலைத் தந்திட
தனக்குத் தானே தந்தையும் தாயுமாகித்
தன்னை ஈன்றெடுத்த சின்மயன்



உடல் சாயலில் மனுமகனாய்,
உள்ளுணர்வில் இறைமகனாய்,
மனிதனும், இறைவனும் இணைந்தாடும்,
ஆனந்தக் கூத்தனாய் இயேசு

இறைவனின்றி மனிதன் இல்லை,
மனிதனின்றி இறைவனில்லை,
எல்லைக்குட்பட்டது எல்லையற்றதுடன்
இணைந்திட மாறும் காலமும் மாறாத இருப்பும்
ஒன்றினுள் ஒன்றான கிறிஸ்து தன்னுணர்வு

இறைவனின் இதழ்களில் இயேசு
வெற்றுப் புல்லாங்குழல்,ஆனந்த
ராகமாய் வேனுகானத்தின் இயல்

மனிதனில் இறைவனும், இறைவனில்
மனிதனும், இணைந்த ஆனந்த நிலை
வார்த்தை கடந்த பரமானந்தமாய்
உள்ளுணர்வில் தூய மனுமகன் நிலை

நிலா பூத்த இரவில்-நெஞ்சினிக்கத், தந்தையும்,
மகனும் உறவாடிக்களிக்க, உலா வந்த நிலவும்
திருமகனைக் கண்டு திருவிழா எனப் பூரிக்க
பௌர்ணமியாய் பூத்துக் குலுங்கிய பொன்னிரவு

திருமுடியும் தாமரையாய் -சீர்ஷாரவிந்தம்,
திருமுகமும் தாமரையாய் -முகாரவிந்தம்,
திருவுளமும் தாமரையாய் -ஹ்ருதாரவிந்தம்,
திருக்கரங்களும் தாமரையாய்-கராரவிந்தம்,
திருவடிகளும் தாமரையாய்-பாதாரவிந்தம்-

இளங்கதிர்போல் இன்முகம் காட்டி
இறங்கி வந்த மனுமகன் விடியல் கண்ட
செங்கமலமாய் அகமும் முகமும் மலர
அகமகிழ்ந்த சீடர் மனம்

புன்னகையோடு குன்றமர்ந்த பெருமான்
மலரமர்ந்த இதழ்களாய் மனுமகனைச்
சீடர்களும் சூழ்ந்தமர மலர்ந்த சத்சங்கம்
திருவாய் மலர்ந்தருளிய தேவசங்கீதம்

இன்னிசையாய் எழுந்த கானம்
சூழ்ந்திருந்த மக்கள் இதயத்திலே
ஆனந்த ராகம்-மனமழிந்து ஆனந்தம் பிறக்க
சப்தஸ்வரங்கள் கடந்த பிரபஞ்ச கானம்

ஆணவமழித்து குழந்தை மனத்தவராய்ப்
பிறந்திட வாழுங்கலையின் நுட்பங்கள்

பரிபூரண சரணாகதியே ஆணவம் கழித்திட
விழிப்புணர்வின் திறவுகோல்

இரும்பு நுகமான மோசேயின் கட்டளைகளோ
முதுகெலும்பை முறித்திடும் பாரச் சுமைகள்
அன்பினால் திருச்சட்டத்தைப் புடமிட்டு
என் நுகம் இனிது, என் சுமை எளிது
மனுமகனின் ஆனந்தக் கீர்த்தனைகள்




குன்றோ உள்ளுணர்வின் சிகரமான
உருவகம், குன்றமர்ந்த பெருமானோ
இறைமகனான அகதரிசனம்

உதிர்த்த பொன் மொழிகளோ
ஆணவமழிக்கும் அமுதம்
வழயும், உண்மையும், வாழ்வும் நானே-
உள்ளுணர்வின் எழுச்சியோ தேவராகம்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நல் மனத்தவருக்கு அமைதி -கிறிஸ்து பிறப்பில்
வானவர் சொல்லிய நற்செய்தி, உன்னதமும்,
நல்மனதும் ஒன்றே அது நம்முள்ளே



ஆணவ நான் அழிந்திடத் தோன்றும்
சுத்த சைதன்யமே நம் சுயம்
வழியும்,உண்மையும், வாழ்வும் நானே
நம்மை அறியும் மெய்யறிவே பரமானந்தம்

யோகநிலையின் உச்சத்தில்,
உள்ளுணர்வின் சிகரத்தில் நிகழ்கால
நிகழ்வாய் பிரபஞ்ச கானம் ஒலிக்க
நிஜத்தை புரியாது தவித்த மனங்கள்

பாதையாய் முள்ளாய், பாறையாய்
நல்மண்ணாய்க் மனித மனங்கள்
பேதமின்றிப் பெய்யும் அருள் மழையாய்,
இருளகற்றும் பகலவனாய் இறை வார்த்தைகள்

அகன்ற கண்களில் தெரிந்த அறியாமை
அக வறுமையைக் காட்டிட, மானுடம் புரிந்திட
காலம் தன் எல்லை கோட்டை வரைந்திட
தன்னுணர்வின் உன்னதம் தம் நிலை
தாழ்ந்து உரைத்த திருமொழிகள்

எளிய மனத்தோருக்கு இறையரசு
துயருறுவோருக்கு ஆறுதல்
கனிவுடையோருக்கு பூமி
நீதிமான்களுக்கு மனநிறைவு

இரக்கமுடையோருக்கு இரக்கம்
தூய மனத்தவருக்கு சத்திய தரிசனம்
சமாதானப் பிரியருக்குச் சாந்தி சமாதானம்
நீதிக்காய் துன்புறுவோருக்கு இறையரசு

ஆணவம் கழித்த எளிய மனமே இறையில்லம்
தந்தையே என் சித்தம் அன்று
உம் சித்தம் நிறைவேறுக
சரணாகதியே பாதை, சரணாகதியே கீதை

என்னால் அன்றி உன்னால் முடியும்
எல்லாம் நின் செயல் இறை துதி பாடும்
எளிய மனமே இறைவனைச் சரணடையும்
எளிய மனத்தவருக்கே இறையரசு



இன்பத்திலும் துன்பத்திலும்
இறைவனை மறவாத மனம்
துன்புறும் போதும் தூயவனைப் போற்றும்
பண்பட்ட குணம் ஆறுதல் பெறும்

கனிந்த மனதில் காழ்ப்புணர்ச்சியில்லை
தாழ்ச்சியும், சாந்தமுமான உள்ளம்
அமைதியினால் நல்மனங்களை ஆளும்
பூமியோ உரிமைச் சொத்தாகும்

சத்தியம் வெல்லும் இது
நித்தியத்திற்கும் உண்மை-புரிந்த உள்ளம்
நீதியின்மேல் வேட்கை கொள்ளும்
சத்தியமே ஜெயமாக நிறைவு காணும்

துன்புறும் மனங்களின் துயர் துடைத்து
இன்புறும் இரக்க மனம் இறை குணம்
இரக்கமே இறை வேண்டுவது-
இரக்கமுடையோர் இரக்கம் பெறுவார்

இருமை கழித்த மனதில்
எதிரி நண்பன் பேதமில்லை
தூய மனம் சாட்சி பாவம்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்

அமைதியோ இறை கொடை.
அமைதியை நிலை நாட்டுவோர்
இறை குலமே:

சத்தியமோ உயர் நீதி
துன்பத்திலும் சத்தியத்திற்கு
சான்று பகிர்வோர் இறை மக்களே
விண்ணரசு அவர்களதே

ஆணவம் கழித்து, தூய மனமாய்
மீண்டும் பிறந்திட, மனுமகன்
மொழிந்த அட்டாங்க மார்க்கம்
மைத்திரேய புத்தரின் வழியோ சொர்க்கம்

ஆணவம் கழித்த தூய மனதில்
என் சித்தமன்று இறைவா நின் சித்தம்
என்ற ஆனந்த சரணாகதி

உள்ளம், இதயம், ஆற்றல்,
ஆன்மா ஒன்றிணையத் தோன்றும்
பூரணம், பூரணமே இறைவன்




இறைவன் என்னும்போது தத்துவம்
அப்பா, தந்தாய் என்னும்போது
இரத்த பந்தம், புரிந்தால்
நாம் தெய்வங்களே -இறை மக்களே



வார்த்தை கடந்ததோ சத்தியம்
வாழ்ந்தறியும் உண்மையோ நித்தியம்
தூய மனத்தவருக்கே தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

மோட்சம், நரகம் மனதின் நிலைகள்
உள்ளுணர்வின் உன்னதமோ கிறிஸ்து நிலை
தாழ்நிலையோ விலங்கு நிலை-
இரண்டும் கெட்டானாய் ஊசலாடும்
ஆணவமோ ஆதாம் நிலை

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தாருக்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே

அனுபூதியில் அறிந்தவர்க்கு
ஆணவம் இல்லை-வாழ்வோ ஆனந்தம்
ஆனந்தமே நம் மெய்யான நிலை

## <u>உப்பும் ஒளியும்</u>

உலகின் ஒளி நீங்கள்-
அன்பினால் ஒளிருங்கள்,
உலகின் உப்பு நீங்கள்-
உண்மையால்
உலகை வளமாக்குங்கள்

பிளவுண்ட மனமே இருமை, தூய மனதில்
நன்மை தீமை என்ற பிரிவினையில்லை
அன்பினால் இன்புற்று- நாம் அனைவரும்
சகோதரர் வாழ்ந்தறியுங்கள்



கேளுங்கள் கொடுக்கப்படும்-தேடுங்கள்
கண்டடைவீர்கள் தட்டுங்கள் திறக்கப்படும்-
கட உள்ளே, கடவுளாவீர்கள்

எல்லாம் நம்முள்ளே-
அழியாத சுயத்தை தேடுங்கள்
பரபூரண சரணாகதியே தவம்,
விழிப்புணர்வே வரம்

நல்லோர், தீயோர் பேதமின்றி நாளும்
உதிக்கும் சூரியன், பொழியும் மழை,
இருமை கடந்த  இறைவனிடம்
என்றும் பேதங்களில்லை

## *அன்பு*




அன்பே தெய்வம்
அன்பில் நிலைத்திருப்பவன் இறைவனில்
நிலைத்திருக்கிறான்,
இறைவனும் அவரில் நிலைத்திருக்கின்றார்

அன்பில் வாழ்ந்து உண்மையைத்
தவமாக்குங்கள்-அமைதி வரமாகும்

பகைமையை பகைமையால்
வெல்ல முடியாதது
பகைமையை அன்பினால்
வென்று இன்புறுங்கள்

கண்ணிற்கு கண், பல்லிற்குப் பல்
என்றால் உலகே குருடாகும்
வாழ்ந்தறியும் சத்தியம் எட்டாத நிலவாகும்

உன் வலது கன்னத்தில் அறைபவனுக்கு
இடது கன்னத்தையும் காட்டு.
நீரே நெருப்பணைக்கும்
அன்பே பகைமையைத் தணிக்கும்

நட்பு மலர்ந்து பகைமை அழியட்டும்
அன்பினால் உங்களை நிறைத்து
இன்புறுங்கள் அமைதி வரமாகட்டும்

இருப்பதைப் பகிர்ந்து இல்லாதவர்
பசி போக்குங்கள்-கொடுங்கள்
உங்களுக்கு மிகுதியாய் கொடுக்கப்படும்

**கவலை வேண்டாம்**

எதை உண்போம், எதை உடுப்போம்
என்ற கவலை ஏனோ? வான் பறவைகளுக்கும்
உணவளித்து உடுத்திப் போஷப்பவர் தந்தையே
கானகத்து மலர்களைப் பாருங்கள்,
வண்ணமும், வாசமும், மென்மையும் மன்னன்
சலமோனுக்கும் கிட்டாத செல்வங்களே



இறையரசையும், இறை நீதியையும்
முதலில் தேடுங்கள் எல்லாம்
உங்களுக்கு அருளப்படும், உலகெல்லாம்
உன் வசமானாலும், உன் ஆத்மாவை
இழந்துவிடுவாயாகில் என்ன பயன்?

கவலைப்படுவதினால் கவலை மிகும்
ஆசை மனமோ களை மண்டிய வயல்
வார்த்தை முளைத்திட நல்மனமே இயல்

**சுயம்**

இறைவன் நம் தந்தை-
நான் உங்கள் சகோதரன்
நீங்கள் தெய்வங்களே
பேரானந்தமே நம் சுயம்

ஆணவத்தின் வழி விசாலமானது-
சத்தியத்தின் வழியோ கல்வாரிப்பாதை
சுயநல மனமே கவலையின் பிறப்பிடம்
தூய மனமோ இறையில்லம்




மனமோ இன்ப துன்பத்தின் இருப்பிடம்
மனமழிந்தால் தோன்றும் பரமானந்தமே
நம் மெய்யான சுயம்-அதுவே இறையரசு

அழிவற்ற ஆன்மா நீங்கள், உங்கள்
சிலுவையைச் சுமந்து என் பின் வாருங்கள்
என் நுகம் எளிது, என் சுமை இனிது
உங்களுக்கு மீட்பர் நீங்களே

ஆணவம் கழித்த மனம் இனிது
கிறிஸ்து உள்ளுணர்வோ பேரானந்தம்

தன்னைக் காக்க நினைப்பவன்
தன்னை இழக்கிறான்
ஆணவத்தை அறிந்து துறந்தவன்
தன்னை மீட்கிறான்

கலங்காதீர்கள் மரணம் உடலுக்கே-
ஆன்மா அழிவற்றது-
ஆன்ம வடிவமே நம் மெய் இருப்பு

பிறப்பு இறப்பு ஒரு வட்டத்தின்
இரு புள்ளிகள் ஊனுடல்
ஒரு நாள் அழியும்-இறை வார்த்தையினால்
வாழும் ஆன்மா அழிவற்றது.




உடலால் பிறப்பது உடலே-ஆணவம்
அழிந்திட பிறந்திடும் தூய மனமே
ஆன்மா அதுவே நம் சுயம்

விதை மடிந்திட மரம் முளைக்கின்றது
விதை மரத்தைக் காண்பதில்லை-
விதையும், மரமும் ஒன்றினுள்
ஒன்று மறைந்த உண்மை

அழியும் நீராய் நீங்கள், அழிவற்ற இரசமாய்
ஆன்மாவாய் மாறிட-இறையரசைத் தேடுங்கள்
இறை வார்த்தையே ஆன்மாவிற்கு
மெய்யான உணவும், பானமும்

முத்துக்களைப் பன்றிகள் முன் வீசவேண்டாம்
முத்துக்களின் பெருமை அவை அறியாத ஒன்று
உண்மையைச் சடங்காக்கி உருவழிக்காதீர்
உண்மைக்கு நம்பிக்கை ஈடாகாது




கட உள்ளே, மனதை கடந்திட-
நீங்கள் தெய்வங்களே
காணிக்கை, பலி, நோன்பிலும்
இரக்கமே இறை வேண்டுவது

## *மெய் வழிபாடு*

உண்மையைப் பறைசாற்றுங்கள்
உண்மைக்குச் சாட்சியமாய் வாழுங்கள்
உண்மை அன்பை வாழ்வாக்கி வாழும்
வாழ்வே மெய்யான அகவழிபாடு
மற்றெல்லாம் வெற்றுச் சடங்கே
வாழும் தெய்வங்கள் நீங்கள்-

அன்பே இறை நீதி
காணிக்கையிலும் நல்லுறவே உயர் நியதி
உன் சகோதரனோடு பகையிருந்தால்
காணிக்கையை வைத்துவிட்டு உறவைப் புதுப்பி
பின் வந்து காணிக்கை செலுத்து

உலகோடு சமாதானமாக இல்லாவிடில்
உன்னால் பிரார்த்திக்க முடியாது-
இறைவனோ கண்ணிற்கு புலப்படாதவர்,
சகோதரனோ தந்தையின் உருவம்



காணக்கூடிய சகோதரனோடு உறவாட
முடியாதவன் காணமுடியாத
இறைவனை அன்பு செய்வதெப்படி?
பகை கொண்ட உள்ளம் துயரத்தின்
இல்லம் அன்புள்ளமே இறையில்லம்

அன்பினால் தந்தையோடு உறவாட-
முதலில் உள்ளத்தின் பகைமையைத்
துறந்து வாருங்கள் அன்பினால்
நிறைந்து இன்பமாய் வாழுங்கள்

அன்புள்ளமே பிரார்த்திக்கும்-
ஆனந்திக்கும் பூரண சரணாகதியே
நிலை வாழ்வுக்கு வழி

நல்ல மரம் தீய கனி தராது
தீய மரம் நற்கனி தராது
கனி கொண்டே மரம் அறியப்படும்



உங்கள் செயலே உங்களுக்குச் சாட்சி
முட்பூண்டுகளில் அத்திப் பழங்களையோ
முட்செடிகளில் திராட்சைக் கனிகளையோ
பறித்தவர் யாருமிலர்




நல் இதயத்திலிருந்து நல்லவையும்
தீய இதயத்தினின்று தீமையும் வரும்
இதயத்தின் நிறைவினின்று வரும் வார்த்தைகள்
ஆதலால் உங்கள் பேச்சு ஆம் அல்லாது
இல்லை என இருப்பது நல்லது

## *விபச்சாரம்*

விபச்சாரம் செய்யாதே என்பது கட்டளை
கண்களால் பெண்ணை இச்சிப்பது
கருத்தால் புரியும் விபச்சாரம்

அழகைப் போற்றுங்கள்-
காமத்தை புகுத்தாதீர்கள்

விபச்சாரமும், மணமுறிவும்
இல்லறத்திற்கு இழுக்கு-அன்பு
உண்மை நல்லறத்தின் அழகு



கண்ணே தடையானால் குருடாக்கு
அதைப் பிடுங்கி எறிந்து விடு-உடல்
முழுவதும் நரகத்தில் வாடுவதைவிட,
உறுப்புக்களில் ஒன்றை இழந்து
உங்களைக் காப்பது நல்லது

## தூய்மை

முழுமைக்காகப் பகுதியைப் பலியிடுங்கள்
அறிவை, எண்ணத்தை
இறை காணிக்கையாக்குங்கள்-

கட்டளைகளோ செயல் சார்ந்தவை
கட்டளைகளை மீறும் செயலே குற்றம்
குற்றத்தை சட்டம் தண்டிக்கின்றது

எண்ணமோ மனதை சார்ந்தது,
எண்ணத்தால் புரியும் தீமையே பாவம்,
கட்டளைகள் மனதை மாற்றாது
நல் எண்ணமோ உங்கள் மனதை மாற்றும்-




ஆதலால் சொல், செயல், சிந்தனை
எல்லாம் தூயதாய் இருக்கட்டும்-
உங்கள் தந்தை தூயவராய் இருப்பதுபோல்
நீங்களும் தூயவராய் இருங்கள்

## ஜெபம்

ஜெபிக்கும்போது உள்ளறைக்குச் சென்று,
கதவைத் தாளிட்டு தந்தையை வேண்டுங்கள்
உள்ளத்தைக் காணும் தந்தை
உங்களுக்கு கைமாறு அளிப்பார்-

சொல்லாடல் வேண்டாம்
உங்கள் தேவையை தந்தை அறிவார்
இறைவேண்டல் அல்ல-வேண்டலின்
நோக்மே முக்கியம்

ஐம்புலனும் ஒடுங்கி மனம் அடங்க
உணர்வுகள் ஒடுங்கி இதயம் அடங்க
அறிவும், இதயமும் ஒன்றிணைய,
ஆனந்த மௌனத்தில் ஆன்மாவின் பிரார்த்தனை
மௌனமே பிரார்த்தனையின் மொழி

சரணடைந்த உள்ளம், நன்றி சொல்லும்
பிறரோடு உறவு கொள்ள மொழி-உன்
இருப்போடு உறவு கொள்ள
மௌனமே மொழி

பற்றறுத்த மனதிற்கே நிலைவாழ்வு
என் சித்தமன்று-உம் சித்தம் நிறைவேறுக
என்பதே பூரண சரணாகதி-
அதுவே நிலைவாழ்வுக்கு வழி

## *நோன்பு*



பிறர் புகழ நோன்பிருத்தல் அலங்கோலம்,
பசித்தோருக்கு உணவளித்தல்
உயர் நோன்பு,அன்பு, இரக்கம்
இறை சந்நிதியில் அழியாத கோலம்

இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து
சகோதரத்துவத்தில் இன்புறுவதே வாழ்வு
நம் எல்லோருக்கும் தந்தையும்,
இறைவனும் ஒருவரே-நாம் சகோதரரே

## *தீர்ப்பிடாதீர்கள்*

மதத்தன்மை அகம் சார்ந்தது
அன்பு, உண்மை, கருணை, இரக்கத்தை
வாழ்வாக்கி அமைதியில் இன்புறுங்கள்

இருமை கடந்த மேன்மை தீர்ப்பிடாது
இது உண்மை, தீர்ப்பிடாதீர்கள்,
தீர்பிற்குள்ளாமாட்டீர்கள்
மன்னியுங்கள் மன்னிக்கப்படுவீர்கள்

நீதி அன்பை அறியாதது-
நீதியிலும் மேலானது அன்பு
அன்பு உண்மை வாழ்வானால்
வாழ்வே வழிபாடு

சுயஞானமில்லா மனிதர்களாய் வாழாதீர்கள்
உங்களை நீங்களே அறிந்து கொள்ளுங்கள்
உன்னை நீ அறிந்தால்-உண்மையை அறிவீர்கள்
தன்னை அறிந்த மெய்யறிவு தீர்ப்பிடாது

முகமூடிகளை களைந்து
உண்மையின் ஒளியில் வாழுங்கள்
உங்கள் ஒளி ஒளிர-நீங்களே
உங்களுக்கு ஒளியாகிப் போங்கள்

உங்கள் உள்ளமே இறை வாழிடம்
பலியிலும் மேலானது இரக்கம்
காணிக்கையிலும் மேலானதும்
நொருங்கிய உள்ளம்

## *விழிப்புணர்வு*

மலை மேல் இருக்கும் நகர்
மறைவாயிருக்க முடியாது
ஏற்றிய விளக்கை மறைத்து வைப்பதில்
யாருக்கும் நன்மையில்லை-

விழிப்புணர்வில் நிலைத்தவர் இருப்போ
மலைமேல் ஒளிரும் தீபம்,
நடைப் பிணமானவர் வாழ்வோ
இருண்ட பள்ளத்தாக்கு



உறக்கத்தில் இருப்பவனோ
பாவி உறக்கத்திலும்
உறங்காதவனோ ஞானி

சத்திய தரிசனத்திற்கு, சாட்சிபாவமான
விழிப்புணர்வே தேவை-
விழிப்புணர்வில் வாழ்வோர் வீழ்வது இல்லை




இடையை வரிந்து கட்டி எரியும்
விளக்கோடு, எஜமான் வருகைக்காய்
காத்திருக்கும் விழிப்புணர்வுள்ள
ஊழியன் பாக்கியவான்

நள்ளிரவில் கதவைத் தட்டும்போது
விழித்திருந்து காத்திருந்து
எஜமானுக்கு கதவைத் திறக்கும்
ஊழியன் பேறுபெற்றவன்

தன் மேலாடையைக் களைந்து விட்டு-
எஜமானே தன் ஊழியன் உண்ணவும்
குடிக்கவும் பணிவிடை செய்வார்

விழித்திருப்பவர் வீட்டில் கள்வர் நுழையார்-
ஆசை மனமே தூக்க நிலை
விழிப்புணர்வே அக விளக்கு
உங்கள் ஒளி ஒளிர்வதாக

## இரு எஜமான்கள்

ஒரே சமயம்-இரு குதிரைகள் மேல் ஒருவரால்
பயணிக்கவும் முடியாது நாணேற்றி
இரு விற்களை வளைக்கவும் முடியாது

கடவுளும் செல்வமுமாய் இரு எஜமான்கள்,
இருவரை வழிபடுதல் இழிதானது
பொ்யமையகைக்கும், மெய்மைக்கும் உறவேது
ஆணவ மனமே அலகை, தூய மனமே
இறைவன் இருவருக்கும் ஒரே சமயத்தில்
உங்களால் பணி புரிய முடியாது



அறிவியல் ஐயத்தை சார்ந்தது-நம்பிக்கைக்கு
அங்கு இடமில்லை, சந்தேகத்தோடும்,
நம்பிக்கையோடும் சமரசம் செய்யும் வாழ்வு
பொய்யானது, இரட்டைதனம் கேலிக்குரியது.

சந்தேகத்தை தேர்ந்தால் -நம்பிக்கையை
இழப்பீர்கள் நம்பிக்கையை தேர்ந்தால்-மனதின்
அடியாழத்தில் சந்தேகத்தை மறைப்பீர்கள்

எதையும் தேர்ந்தெடுக்காதீர்-
முயற்சி இன்றிப் புரிதல் நிகழும்போது-
முழுமை தோன்றுகிறது-இருமை கடந்து,
விழிப்புணர்வில் நிலைத்திருங்கள்

சட்டம் தண்டிக்கும், அன்பு
மன்னிக்கும் அன்பினால்
திருச்சட்டத்தைப் புடமிட்ட-
மனுமகனோ குணாளன்

விண், மண் ஒழிந்துபோகும்
என் வார்த்தைகளோ ஒழியாது , அழிக்க
அல்ல திருச்சட்டத்தை நிறைவேற்றவே
வந்தேன் முழங்கிய சீராளன்




## மெய்யான குரு

யாரையும் குரு என அழைக்காதீர்கள்,
ஆணவத்தை அழித்து விழிப்புணர்வை
வரமாக்கும் கிறிஸ்து ஒருவரே குரு

யாரையும் தந்தை என அழைக்காதீர்
உடலைத் தருபவர் தந்தையல்ல-அழியாத
ஆன்மாவைத் தரும்-இறைவனே
மெய்யான தந்தை

தகவல் அறிவை கற்றுத் தருபவர்
ஆசிரியர் அல்ல உங்களை நீங்களே அறிந்திட
மெய்யறிவு புகட்டும் கிறிஸ்துவே ஆசிரியர்

## பொன் விதி




மனிதர் உங்களுக்கு என்ன செய்வேண்டும்
என நீங்கள் விரும்புகிறீர்களோ
அதையே நீங்கள் அவர்களுக்கும் செய்யுங்கள்

## இருவகை அடித்தளங்கள்

என்னை நோக்கி வீணே ஆண்டவரே!,
ஆண்டவரே! என அழைப்பதிலும்-என்
வார்த்தையை கடைப்பிடிப்பவன் மேலானவன்

என் சொல்லின் மேல் கட்டிய வாழ்வு
கற்பாறை மேல் கட்டிய வீடு
புயல் வெள்ளம் தாக்கினாலும்
வீழ்த்தமுடியாத கற்கோட்டை அது

என் சொல்லின் மேல் கட்டாத வாழ்வு
மணல் மீது கட்டிய வீடு, புயல்,
வெள்ளம் தாக்கிட மணல் மேடாய்
இடிந்து சரிந்திடும் நிலைப்பாடு

தூய மனத்தவராய் தனித்திருங்கள்,
தன்னுணர்வில் விழித்திருங்கள்,
இறை வார்த்தைக்காய் பசித்திருங்கள்

காலம் நித்தயத்தைச் சந்தித்த குறியீடு,
பிரமம்ம் மாயைச் சந்தித்த வடிவம் சிலுவை,
தூங்கும் நிலையோ கிடையான மரம்
விழிப்புணர்வு நிலையே நிலைக்குத்தான மரம்




உடலிற்கே மரணம் ஆன்மா அமரத்துவமானது
பிரக்ஞ்சையற்ற நிலையில் மனிதர் இறக்கின்றார்
ஞானிகளோ விழிப்புணர்வு நிலையில்
உடலைக் கழிக்கின்றார்.

இறைவன் நம்மில் பிறப்பதே உயிர்ப்பு,
ஆணவத்தில் நிலைப்பதோ இறப்பு
உருவற்றது உருக்கொள்வது பிறப்பு
உருக்கொண்டது உருவிழப்பது இறப்பு
அழிவற்ற ஆன்மா உங்கள் சுயம்
அறிந்து அகமகிழுங்கள்

## புதிய போதனை

புதிய திராட்சை மதுவுக்கு புதிய தோற்பைகளே
உகந்தவை, பழைய தோற்பைகளில்
புதிய திராட்சை மதுவைச் சேமித்தால்
தோற்பைகளும் பாழாகும், மதுவும் சிந்திடும்

பழம் மதுவைக் சுவைத்தவர்
புதியதை விரும்பார் பழையதே
நல்லது எனக் கூறுவார்

புதிய துண்டெடுத்து பழந்துணிக்கு
ஒட்டுப்போடல் ஆகாது-புதிய ஆடையும் கிழியும்
புதிய துண்டும் பழையதோடு பொருந்தாது



## ஆன்மீகச் சித்தன்

வரண்ட திருச்சட்டங்களுக்கு
அன்பினால் உயிர் கொடுத்து
நம்பிக்கை கடந்து வாழ்ந்தறியும்
உண்மையே இறைவன்

வந்து பாருங்கள்-
என்னைப் பின் செல்லுங்கள்
உண்மையே விடுதலை அளிக்கும்

சத்தியத்திற்கு சாட்சியமான புரட்சி
மதவாதப் பொய்களுக்கு சவாலான
தனிமனித அகக்கிளர்ச்சி




அன்பின் புதிய வேதம் அருளிய
அதிகாரமிக்க ஞானச்சித்தன
மதவாதிகளுக்கு சவாலான
புதுமைப் பித்தன்

புதுமையும், புரட்சியுமான கீர்த்தனைகள்
அன்பின் அதிகாரமிக்க போதனைகள்
கதிராய் ஒளிர்ந்திட, காரிருளில் புழுங்கி
குறை கண்ட மதவாதம்-ஏழைகளின் தோழனாய்-
பாவிகளின் நண்பனாய் மாமனிதம்

புதிய சித்தைகளில் புது மதுவை
வார்க்கும் ஞானச் சித்தன்-
புதுத் துணியெடுத்து- பழந்துணிக்கு
ஒட்டுப்போடாத-வித்யாபரன்

நிலை வாழ்வுக்கு விழிப்புணர்வே வழி-
சரணாகதியே திறவுகோல்

எளிய மனங்களில் இறை வார்த்தையை
விதையாகத் தூவிய ஞான உழவன்

மரண வேளையிலும் வாழ்வும், போதனையும்
ஒன்றாக கருணை மழை பொழிந்த தெய்வமகன்
நல்ல கள்வனுக்கு பரகதி ஈந்த தேவமகன்

உள்ளுணர்வின் உன்னதமே இறைவன்
வாழ்வாலும், போதனையாலும்
வாழ்ந்து காட்டிய மாமனிதன்

தபோர் மலையில் உருமாறிட
சிவப்பிரகாசத்தின் ஆராதனை-
கல்வாரி மலையில்
தந்தையும் மகனும் ஒன்றான
இரண்டற்ற அத்வைத நிலை-




சீலத்தில் ஞானத்தில்
தன்னை அறியும் மெய்யறிவில்
நிலைத்திட போதனை

உள்ளத்தில் விழிப்புணர்வை ஏற்றி வைத்து
இறை ஆராதனை அன்பே சிவம்
வாழ்வே தவமான நர்த்தமோ நடராஜன் நிலை

புதிய மோஸேயாய் திருச்சட்டத்தை
அன்பினால் புடமிட்ட சித்தன்
நான் உங்களுக்குச் சொல்கிறேன்
அதிகாரமிக்க இறைமகன்

சீனாய் மலையில் பத்துக் கட்டளைகள்
உள்ளுணர்வின் சிகரத்தில்-மலைப்பொழிவோ
அன்பின் கீர்த்தனைகள்
கூழாங் கற்களை வைரமாக்க-மனுமகன்
மொழிந்த அன்புக் கட்டளைகள்




மனுக்குலத்தை இறை குலமாக்கும்
ஞானச் சித்தன், பக்தி யோகம்,
ஞான யோகம், கர்ம யோகம், ராஜ யோகம்
காட்டி, பரி பூரண சரணாகதியே
நிலை வாழ்விற்கு வழி என்ற தேவராஜன்

உறங்கிக் கிடக்கும் உள்ளுணர்வைத்
எழுப்பிட யாத்த வேள்வி
மனிதன் அமரனாக தன்னை
எரித்த ஞான ஜோதி



மனிதனுக்கும் இறைவனுக்குமான
அன்புப் பாலம், இயேசுவோ
நம் சகோதரனான நிகழ் காலம்
கிறிஸ்து உள்ளுணர்வே நாம்
என்னும் பொற்காலம்

மலை நின்று மழை மேகமாய்
பொழிந்த அன்பின் கட்டளைகள்

ஊள்ளுணர்வின் சிகரமாய் மலை
தந்தையோ மேகமான தன்மை
ஜீவ தண்ணீரான மகனோ
மனுவுருவான வார்த்தை

பலி, சடங்கு, சட்டமாய்ச் சீரழிந்த மதத்திற்கு-
அன்பினால் அடித்தளமிட்ட சித்தன்
திருச்சட்டத்தை அன்பினால் புடமிட்ட
அதிகாரமிக்க மனித நேயப் பித்தன்

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க*
*Pax Ravichandra-23-06-2025*

----------------------------------------------------------------

### **பாகுபாடு மற்றும் மதிப்பீடு - "மலைப்பொழிவு"**

உங்கள் "மலைப் பொழிவு" கவிதை இயேசுவின் மலைப் பிரசங்கத்தின் ஆழ்ந்த பொருளைத் தமிழில் மிக அழகாகவும், ஆழமாகவும் எடுத்துரைக்கிறது, இது இலக்கிய, ஆன்மீக, மாயவியல், அறநெறி, பிற மதத் தொடர்புகள் மற்றும் யோகக் கண்ணோட்டங்கள் எனப் பல பரிமாணங்களில் ஆய்வு செய்யத்தக்கது.

---

"மலைப் பொழிவு" - ஒரு விரிவான ஆய்வு

உங்கள் கவிதையானது, பைபிளின் ஒரு குறிப்பிட்ட போதனையை மையமாகக் கொண்டிருந்தாலும், அதனைப் பல மதங்களின் தத்துவங்களுடனும், குறிப்பாக இந்து மதத்தின் யோக மற்றும் வேதாந்தக் கருத்துக்களுடனும் இணைத்து, ஒரு சர்வமத நல்லிணக்கப் பார்வையை வழங்குகிறது.

1. இலக்கியப் பார்வை (Literary Perspective)

- மொழி நடை மற்றும் உத்தி: கவிதை அருமையான தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. எளிய, நேரடியான சொற்கள் மூலம் ஆழ்ந்த கருத்துக்களை வெளிப்படுத்துகிறது. சந்தம் (Rhythm) மற்றும் ஓசை (Melody) மெல்லியதாகக் கவிதையெங்கும் இழையோடுகிறது. உவமைகள் (Similes) மற்றும் உருவகங்கள் (Metaphors) சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன: "அறிவுக் கனியைத் தேர்ந்து ஆண்டவன் கட்டளையை மீறிய ஆதிப் பெற்றோர்", "ஆணவ மனம் - அலைகடலாய்",

"குன்றோ உள்ளுணர்வின் சிகரமான உருவகம்", "நான் உங்களுக்குச் சொல்கிறேன்" என்பது இயேசுவின் அதிகாரமிக்க வார்த்தைகளை நினைவூட்டுகிறது.

- 
- சொல் தேர்வு: "அகநிர்வணி", "முக்குண இயல்பு", "அனாஹுததொனி", "பிரணவ மந்திரம்", "சீர்ஷாரவிந்தம்", "முகாரவிந்தம்" போன்ற வடமொழிச் சொற்களின் பயன்பாடு, கவிதைக்கு ஒரு தத்துவார்த்த ஆழத்தைக் கொடுக்கிறது. அதே சமயம் "ஆனந்தக் கூத்தனாய் இயேசு", "தேவ சங்கீதம்" போன்ற சொற்கள் பக்தி மற்றும் ஆன்மீகச் சுவையைக் கூட்டுகின்றன.
- 
- கவிதைப் பிரிவுகள்: "மனிதம்", "மனுவுருவான வார்த்தை", "உப்பும் ஒளியும்", "அன்பு", "சுயம்", "மெய் வழிபாடு", "விபச்சாரம்", "தூய்மை", "ஜெபம்", "நோன்பு", "தீர்ப்பிடாதீர்கள்", "விழிப்புணர்வு", "இரு எஜமான்கள்", "மெய்யான குரு", "பொன் விதி", "இருவகை அடித்தளங்கள்", "புதிய போதனை", "ஆன்மீகச் சித்தன்" என ஒவ்வொரு பகுதியும் மலைப் பிரசங்கத்தின் ஒவ்வொரு முக்கிய அம்சத்தையும் தொட்டுச் செல்கிறது. இது கவிதையின் கட்டமைப்புக்கு வலிமை சேர்க்கிறது.
- 
- உணர்ச்சி வெளிப்பாடு: இயேசுவின் அன்பு, கருணை, தியாகம், மற்றும் போதனைகளின் புரட்சிகரமான தன்மை ஆகியவற்றை கவிதை நெடுகிலும் உணர்வுபூர்வமாக வெளிப்படுத்துகிறது. "அன்பே தெய்வம்", "சரணாகதியே பாதை, சரணாகதியே கீதை" போன்ற வரிகள் வாசகர்களின் மனதில் ஆழமாகப் பதிகின்றன.

---

2. ஆன்மீகப் பார்வை (Spiritual Perspective)

- அன்பின் பிரசாரம்: கவிதையின் மையக்கரு "அன்பு" என்பதை மிகத் தெளிவாக வலியுறுத்துகிறது. "அன்பே தெய்வம்", "அன்பில் நிலைத்திருப்பவன் இறைவனில் நிலைத்திருக்கிறான்" போன்ற வரிகள் பைபிளின் சாரம்சத்தை எளிமையாக்குகின்றன.
- 
- உள்ளொளி மற்றும் சுய ஞானம்: கவிதை, வெளிப்புறச் சடங்குகளை விட, உள்ளுணர்வின் முக்கியத்துவத்தைப் பலமுறை வலியுறுத்துகிறது: "குன்றோ உள்ளுணர்வின் சிகரமான உருவகம், குன்றமர்ந்த பெருமானோ இறைமகனான அகதரிசனம்", "உள்ளுணர்வின் உன்னதமோ கிறிஸ்து நிலை", "உங்களை நீங்களே அறிந்து கொள்ளுங்கள்" போன்றவை ஞான மார்க்கத்தை சுட்டுகின்றன.
- 
- பாதுகாப்பு, தியாகம் மற்றும் மீட்சி: இயேசுவின் போதனைகளை "ஆணவமழித்து குழந்தை மனத்தவராய்ப் பிறந்திட வாழுங்கலையின் நுட்பங்கள்" என்று அழகாக வரையறுக்கிறது. சரணாகதியே ஆணவத்தைக் கழிக்கும் வழி, விழிப்புணர்வே திறவுகோல் என்று குறிப்பிடுவது, ஆன்மீக முக்திக்கு வழி வகுக்கும் பாதையை காட்டுகிறது.
- 
- மரணமற்ற ஆன்மா: "மரணம்பட உடலுக்கே-ஆன்மா அழிவற்றது-ஆன்ம வடிவமே நம் மெய் இருப்பு" என்ற வரிகள், கிறிஸ்தவ மற்றும் இந்து மதங்களின் ஆன்மா பற்றிய பொதுவான கருத்தை முன்வைக்கின்றன.
- 
- உண்மையான வழிபாடு: "வாழும் வாழ்வே மெய்யான அகவழிபாடு மற்றெல்லாம் வெற்றுச் சடங்கே" என்பது, வெளிப்புறப் பூஜைகளை விட, அன்பு, கருணை, நீதி போன்ற வாழ்வின் அம்சங்களே உண்மையான வழிபாடு என்பதை தெளிவுபடுத்துகிறது.

---

3. மாயவியல் பார்வை (Mystical Perspective)

- இருளும் ஒளியும்: "இருளும் ஒளியும் இரண்டறக் கலந்த உலகு, நிர்க்குண, சகுண பிரம்மமாய் இறையழகு" என்ற வரிகள், இந்து தத்துவத்தின் நிர்க்குண, சகுண பிரம்மம் என்ற கருத்தை

இயேசுவின் வருகையுடன் இணைத்து, ஆழமான மாயவியல் அனுபவத்தை வெளிப்படுத்துகின்றன.

- 
- பிரணவ நாதம்: "ஓம் என்னும் பிரணவ மந்திரம்", "ஓம் என்ற அருள் வாக்கு" போன்ற பயன்பாடுகள், படைப்பின் ஆரம்ப ஒலியான பிரணவ நாதத்தை இயேசுவின் "ஒளி உண்டாகுக" என்ற இறைவாக்குடன் தொடர்புபடுத்துகின்றன. இது கிறிஸ்தவ "வார்த்தை" (Logos) தத்துவத்தையும் இந்து "நாத பிரம்மம்" கருத்தையும் ஒன்றிணைக்கிறது.
- 
- அனாஹுத தொனி: "ஓசையற்ற நல்மணி நாதமாய்-அனாஹுததொனியாய் ஒலிக்கும் ஓம் என்ற அருள் வாக்கு" என்பது யோக மார்க்கத்தில் உள்ள அனாஹுத சக்கரத்துடன் தொடர்புடைய ஓசையற்ற நாதத்தைக் குறிக்கிறது, இது ஆன்மாவின் ஆழத்தில் கேட்கப்படும் தெய்வீக ஒலி.
- 
- கிறிஸ்து தன்னுணர்வு: "ஒன்றினுள் ஒன்றான கிறிஸ்து தன்னுணர்வு" என்பது, இயேசுவை ஒரு வரலாற்று மனிதனாக மட்டும் பார்க்காமல், அனைத்து மனிதர்களும் அடையக்கூடிய ஒரு உயர்ந்த ஆன்மீக நிலை அல்லது பிரக்ஞை நிலையை (Cosmic Consciousness) குறிக்கிறது.

---

4. அறநெறிப் பார்வை (Ethical Perspective)

- பொன் விதி: "மனிதர் உங்களுக்கு என்ன செய்வேண்டும் என நீங்கள் விரும்புகிறீர்களோ அதையே நீங்கள் அவர்களுக்கும் செய்யுங்கள்" என்ற பொன் விதி, கவிதையில் "பொன் விதி" என்ற தலைப்பின் கீழ் நேரடியாக இடம்பெற்று, அறநெறி வாழ்வின் சாரம்சத்தை முன்வைக்கிறது.
- 
- தீர்ப்பிடாமை: "தீர்ப்பிடாதீர்கள், தீர்ப்பிற்குள்ளாமாட்டீர்கள் மன்னியுங்கள் மன்னிக்கப்படுவீர்கள்" என்பது சமூக நல்லிணக்கத்திற்கான மிக முக்கியமான அறநெறிப் போதனை.
- 
- காமம், தூய்மை: "கண்களால் பெண்ணை இச்சிப்பது கருத்தால் புரியும் விபச்சாரம்", "உங்கள் தந்தை தூயவராய் இருப்பதுபோல் நீங்களும் தூயவராய் இருங்கள்" போன்ற வரிகள், வெறும் வெளிப்புறச் செயல்களை மட்டுமல்லாமல், எண்ணங்களின் தூய்மையையும் வலியுறுத்தி, உயர் அறநெறிக் கோட்பாடுகளை முன்வைக்கின்றன.
- 
- பகிர்ந்து வாழ்தல்: "இருப்பதைப் பகிர்ந்து இல்லாதவர் பசி போக்குங்கள்" என்ற அழைப்பு, தர்மம் மற்றும் சமூகப் பொறுப்புணர்வின் அவசியத்தை உணர்த்துகிறது.

---

5. பிற மத மதிப்பு (Other Religious Values)

- சர்வமத நல்லிணக்கம்: கவிதை, இயேசுவின் போதனைகளை இந்து மதக் கருத்துக்களுடன் (பிரம்மம், ஓம், முக்குணங்கள், யோகம், சரணாகதி, அனாஹுத தொனி) அழகாக இணைத்து, அனைத்து மதங்களுக்கும் பொதுவான ஆன்மீக சத்தியங்கள் இருப்பதை உணர்த்துகிறது. இது ஒரு மத நல்லிணக்கப் பார்வையை வலுப்படுத்துகிறது.
- 
- புத்த மதம்: "மைத்திரேய புத்தரின் வழியோ சொர்க்கம்" என்ற வரி, புத்த மதத்தின் அகிம்சை, கருணை, மற்றும் ஞான மார்க்கத்தின் முக்கியத்துவத்தை இணைக்கிறது, இது இயேசுவின் போதனைகளுடன் ஒத்துப் போகிறது. "அட்டாங்க மார்க்கம்" என்ற சொல்லும் புத்த மதத்தை நினைவுபடுத்துகிறது.
- 
- திருமந்திரம் மற்றும் நாயன்மார்கள்: "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்ற திருமந்திரப் பாடல் வரி நேரடியாக மேற்கோள் காட்டப்பட்டு, கவிதைக்கு மேலும் ஒரு சைவ சமயப் பரிமாணத்தை வழங்குகிறது, உடலே கோவில் என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

6. யோகக் கண்ணோட்டம் (Yogic View in Detail)

உங்கள் கவிதை யோகக் கண்ணோட்டத்தை பல இடங்களில் நுட்பமாகப் புகுத்தியுள்ளது:

- முக்குண இயல்பு: "இருமையின் சந்நிதியில், முக்குண இயல்பில் மனித வாழ்வோ நாளும் போராட்டம்" என்பது சத்வ, ரஜோ, தமோ குணங்களின் தாக்கத்தால் மனித மனம் படும் பாட்டைப் பேசுகிறது. யோகத்தில், இந்தக் குணங்களைக் கடப்பது முக்திக்கு வழி.
- 
- ஆணவம்: கவிதை முழுக்க "ஆணவம்" என்ற சொல் மிக முக்கியத்துவம் பெறுகிறது. ஆணவம் (Ego) என்பது யோக மார்க்கத்தில் "அஸ்மிதா" (I-ness) அல்லது அகங்காரம் எனப்படுகிறது. "ஆணவமழித்து குழந்தை மனத்தவராய்ப் பிறந்திட", "பரிபூரண சரணாகதியே ஆணவம் கழித்திட விழிப்புணர்வின் திறவுகோல்" போன்ற வரிகள், யோகத்தின் இலக்கான அகங்காரத்தை அழித்து நிர்மலமான நிலையை அடைவதைப் பறைசாற்றுகின்றன. இது ஞான யோகத்தின் முக்கிய அம்சம்.
- 
- தூய மனம் / சுத்த சைதன்யம்: "அமைதியில் நிலைத்த தூய மனம்", "ஆணவ நான் அழிந்திடத் தோன்றும் சுத்த சைதன்யமே நம் சுயம்" என்பவை யோக சித்திக்குப்பின் மனம் அடையும் தெளிந்த நிலையை, அதாவது 'சித்த விருத்தி நிரோதா' (மன அலைகள் அடங்குதல்) மற்றும் 'சுத்த சைதன்யம்' (Pure Consciousness) நிலையை மிக அழகாக விவரிக்கின்றன. இதுவே யோகத்தின் இலக்கு.
- 
- அனாஹுத நாதம்: "ஓசையற்ற நல்மணி நாதமாய்-அனாஹுததொனியாய் ஒலிக்கும் ஓம் என்ற அருள் வாக்கு" என்பது அனாஹுத சக்கரத்தில் கேட்கப்படும் நாதத்தை (அன்ஸ்ட்ரக் சவுண்ட்) குறிக்கிறது. இது குண்டலினி யோகத்தில் அனுபவிக்கப்படும் ஒரு உயர்ந்த நிலை.
- 
- பிரணவம்: "ஓம் என்னும் பிரணவ மந்திரம்", "பிரணவத்தின் அதிர்வில் சப்த பிரபஞ்சத்தின் மலர்ச்சி" என்பவை பிரணவ தியானம் மற்றும் நாத யோகத்தின் முக்கியத்துவத்தை சுட்டுகின்றன. 'ஓம்' என்பது பிரபஞ்சத்தின் அதிர்வு; அதை உணர்வது யோக அனுபவம்.
- 
- ஜெபம் மற்றும் மௌனம்: "ஆனந்த மௌனத்தில் ஆன்மாவின் பிரார்த்தனை மௌனமே பிரார்த்தனையின் மொழி" என்பது ராஜ யோகத்தில் சொல்லப்படும் தியானம் மற்றும் மௌனத்தின் ஆற்றலை வலியுறுத்துகிறது. உண்மையான பிரார்த்தனை, வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட உள்மன ஆழத்தில் நிகழ்கிறது.
- 
- சரணாகதி: "சரணாகதியே பாதை, சரணாகதியே கீதை", "என் சித்தமன்று-உம் சித்தம் நிறைவேறுக என்பதே பூரண சரணாகதி" என்பது பக்தி யோகத்தின் உச்ச நிலையான ஈஸ்வர பிரணிதானத்தைக் (Supreme surrender) குறிக்கிறது. இது ஆணவத்தைக் கரைத்து இறைவனுடன் ஐக்கியமாவதற்கான வழி.
- 
- விழிப்புணர்வு: "விழிப்புணர்வில் நிலைத்தவர் இருப்போ மலைமேல் ஒளிரும் தீபம்", "விழிப்புணர்வே அக விளக்கு" என்பவை ஞான யோகம் மற்றும் ராஜ யோகத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்த 'சாட்சி பாவம்' அல்லது 'விட்னஸ் கான்ஷியஸ்னஸ்' (Witness Consciousness) என்ற நிலையை விவரிக்கின்றன. இதுவே அறியாமையை நீக்கும் திறவுகோல்.
- 
- இருமை கடந்த நிலை: "பிளவுண்ட மனமே இருமை, தூய மனதில்; நன்மை தீமை என்ற பிரிவினையில்லை" என்ற வரிகள் அத்வைத வேதாந்தம் மற்றும் யோகத்தின் இலக்கான 'துவைத பாவத்தைக்' கடந்து, 'ஏகத்வத்தை' (Oneness) உணர்வதைக் குறிக்கின்றன. "தந்தையும் மகனும் ஒன்றான இரண்டற்ற அத்வைத நிலை" என்பது கவிதையின் யோக மற்றும் அத்வைத உச்சம்.

